REGD.No. M. 6311 ★ தனி இதழ் 1 அணு ★ ★ PHONE: 55630

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The official organ of the D.P.F.

மலர் 3] சென்னை: புரட்டாசி 19உ புதன் (5—10—55) ★ ★ வெளியீடு: புரட்டாசி 20உ வியாழன் (6—10—55) [இதழ் 96

## 'சுவாமி'களுக்கு சிறைத் தண்டனை

காசி, அக் 4—

கடந்த 1954 பிப்ரவரித் திங்களில், காசி விசுவநாதர் ஆலயத்திற்குள் தாழ்த்தப்பட்டவர்கள் நுழைவதைத் தடுக்க முயன்ற 'தர்ம சங்' தலைவரான 'சுவாமி' கர்பத்ரிஜி என்பாருக்கு ஒரு மாத வெறுங் காவல் சிறைத் தண்டனை விதித்து, காசி முதல் வகுப்பு நீதிபதி தீர்ப்பளித்திருக்கிறார். 'தர்ம சங்'கைச் சேர்ந்த வேறு 20 தொண்டர்களும் அதே குற்றத்திற்காக ரூ. 50 அபராதம் விதிக்கப்பட்டனர்; அவர்கள் அபராதம் கட்ட மறுத்து, ஒரு மாத வெறுங் காவல் தண்டனையை ஏற்றுக்கொண்டனராம்.

# காங்கிரஸ் ஆட்சியின் ஊழல்கள்

## ஐதராபாத் மந்திரிகள் மீது இலஞ்சக் குற்றச்சாட்டுகள்

### சட்ட சபையில் கண்டன, நம்பிக்கையில்லாத் தீர்மானங்கள்

செகந்தராபாத், அக். 4—

ஐதராபாத் மாநில சர்க்கார்மீதும், ரெவினியூ மந்திரி மீதும் இரண்டு கண்டனத் தீர்மானங்களும், உள்நாட்டு இலாகா அமைச்சர்மீது நம்பிக்கையில்லாத் தீர்மானமும், இன்று சட்ட சபையில் விவாதிக்கப்பட்டிருக்கின்றன.

சர்க்கார்மீதும், மந்திரிகள்மீதும் இலஞ்சம், பாரபட்சம், சாதாரண மனிதரைத் தாக்குதல் போன்ற கடும் குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டிருக்கின்றன.

சர்க்காரும், மந்திரிகளும் தங்கள் அதிகாரத்தைத் தவறான வழிகளில் பயன்படுத்தியதாக உறுப்பினர்கள் எடுத்துக்காட்டியிருக்கின்றனர்.

(4-ம் பக்கம் பார்க்கவும்)

## பகிரங்க விவாதத்தினால் தீங்கு ஏற்படுமாம்!

ஐ. நா. நிகழ்ச்சிப் பட்டியலில், டச்சு நியூ கினி பிரச்சினையைச் சேர்ப்பதென்று ஐ. நா. பொதுச் சபை தீர்மானித்துள்ளது.

அந்தப் பிரரேபணைக்குச் சாதகமாக 31 வாக்குகளும், பாதகமாக 18 வாக்குகளும் கிடைத்தன; 10 நாடுகள் வாக்கெடுப்பில் கலந்து கொள்ளவில்லை.

பிரரேபணையை எதிர்த்து, டச்சு அயல்நாட்டு அமைச்சர் பேசுகையில், பகிரங்கமான விவாதத்தினால் தீங்குதான் ஏற்படும் என்று கூறினார்.

## அதிகாரங்கள் ஆண்டவனிடமிருந்து பெறப்படுகின்றனவாம்!

### வெள்ளையரல்லாதாருக்கு வாக்குரிமை இல்லையாம்!

ஆப்பிரிக்காவில் வெள்ளையரின் நிற வெறியும் — குதர்க்க வாதமும்

ஜோகன்ஸ்பர்க், அக். 4—

"தென்னாப்பிரிக்காவில் தேசிய சர்க்கார் அமைக்க உத்தேசித்துள்ள குடியரசில் நிச்சயம் இந்தியர்களுக்கு வாக்குரிமை இருக்காது,"

என்று, தொழிலாளர் மந்திரியான ஜக்தேகினார்க் தெரிவித்திருக்கிறார்.

"இந்தியர்களுக்கு வாக்குரிமை தர முடியாமைக்குக் காரணம், அவர்களது மத, கலாச்சாரப் பாரம்பரியம், வெள்ளை இனத்தவரின் மத, கலாச்சாரப் பாரம்பரியத்திலிருந்து வேறுபட்டதாகும்; அந்த நிலையில் அவர்களுக்கு வாக்குரிமை தருவது, அரசியல் துறையில் குழப்பத்தையே உண்டுபண்ணும்;

"நாட்டின் கலாச்சாரத்தை ஒட்டி குடியரசு அமையும் என்பதால், ஆப்பிரிக்கர்களுக்கும், இதர வெள்ளையரல்லாதவருக்கும் வாக்குரிமை தரப்படமுடியாது; உள்ள பரிகாரம் எல்லாம், தனித்தனியாக, அபிவிருத்திக்கு வழி செய்து கொள்ள வேண்டுவதுதான்;

"எல்லா அதிகாரங்களும், உரிமைகளும், ஆண்டவனிடமிருந்தே பெறப்படுகின்றன; இந்த அடிப்படையில் தான் குடியரசு அமையும்,"

என்றும் அவர் தெரிவித்திருக்கிறார்.

## அல்ஜீரிய சிக்கல்

பிரான்சின் அச்சுறுத்தல்

"ஐ. நா. பொதுச்சபை விவாதிக்க வேண்டிய நிகழ்ச்சிப் பட்டியலில் அல்ஜீரிய சிக்கலையும் இடம் பெறச் செய்யும் தீர்மானத்தை ஆதரிக்கும் நாடுகள், பிரான்ஸ் நாட்டுடன் கொண்டிருக்கும் உறவுகளுக்கு உலை வைப்பனவாக இருக்கும்,"

என்று, பிரெஞ்சு சர்க்கார் எச்சரிப்பதற்கான ஏற்பாடுகளை மேற்கொண்டிருப்பதாக வெளிவிவகார இலாகா தெரிவித்திருக்கிறதாம்.

பிரெஞ்சு வெளிவிவகார இலாகா மந்திரி, பல நாடுகளிலுமுள்ள தனது தூதவர்கள் அந்த அந்த சர்க்கார்களின் கவனத்திற்கு இந்த 'நெருக்கடி'யைக் கொண்டு வருமாறு செய்தி அனுப்பியிருக்கிறாராம்!

## 'வரிகொடா இயக்கம் நடத்துவோம்'

### 'மாநிலமெங்கணும் கிளர்ச்சியில் ஈடுபடுவோம்'

### மாஸ்டர் தாராசிங் போர்முழக்கம்

"சீக்கிய மதம் காப்பாற்றப்பட வேண்டுமானால், சீக்கியர்களுக்கு அரசியல் அதிகாரம் இருக்க வேண்டும்; பஞ்சாப் மொழிவழி மாநில அமைப்பில்தான் அந்த அதிகாரம் கிடைக்கும்;

"மாநில புனரமைப்புக் குழுவின் சிபாரிசுகள், பஞ்சாப் மொழிவழி மாநிலம் அமைவதை நிராகரிக்குமானால், அகாலிகள் மாநிலமெங்கும் பெரியதோர் கிளர்ச்சியிலீடுபடுவர்; மக்கள், மாநில சர்க்கார் விதிக்கிற வரியினைத் தரவொட்டாது வரிகொடா இயக்கம் நடத்தப்படும்,"

என்று, அகாலி தளத் தலைவரான மாஸ்டர் தாராசிங் தெரிவித்திருக்கிறார்.

மாநில புனரமைப்புக் குழுவின் சிபாரிசுகள் சீக்கிரமே வெளியிடப்படவிருப்பதை ஒட்டி, பெரிய கிளர்ச்சிகள், ஆர்ப்பாட்டங்களுக்கான ஏற்பாடுகள் துரிதமாக நடைபெறுகின்றன — பஞ்சாப், பெப்சு மாநிலங்களில்!

'பலர் நேரடி நடவடிக்கைகளில் ஈடுபடக் கூடும்'—'மாநிலத்தின் அமைதிக்குப் பங்கம் ஏற்படக் கூடும்'—என்று அச்சப்படுகிறதாம், சர்க்கார்!

இப்போதிருந்தே பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகளை சர்க்கார் மேற்கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

## 327 பேர் பலி!

வட வியட்நாமில் வீசிய கோரமான புயலுக்கு, 327 பேர் 'பலி'யாகிவிட்டனராம்; பெரும்பாலும், கடற்கரை ஓரமாக வசித்தவர்களே பலியாகிவிட்டதாகக் கூறப்பட்டுள்ளது.

## மற்றொரு போராட்டத் தலைவருக்கு 10 ஆண்டு கடுங்காவல் தண்டனை

கோவா இராணுவ நீதிமன்றத் தீர்ப்பு

பெல்காம், அக். 4—

கடந்த மே திங்கள் 28-ந் தேதியன்று கோவாவில் 'சத்தியாக்கிரகம்' செய்வதற்காக ஒரு தொண்டர் படையை அழைத்துச் சென்ற இந்திய ம. சோ. கட்சித் தலைவர் எஸ். ஆர். லிமாயி அவர்களுக்கு கோவா வட்டார இராணுவ நீதிமன்றம், 10 ஆண்டுக் கடுங்காவல் தண்டனை விதித்துள்ளது; மேலும், தண்டனைக் காலம் முடிந்ததும் அவர் நாடு கடத்தப்படுவார் என்றும் தெரிய வருகிறது.

மேலும் இரண்டாண்டுகளுக்கு தினம் 50 'எஸ்கியுதாஸ்' வீதம் (கோவா நாணயம்) அபராதம் கட்ட வேண்டும் என்றும் தீர்ப்பளிக்கப்பட்டிருக்கிறதாம் (அபராதத் தொகை சுமார் ரூ. 2,200 ஆகும்.)

இந்தத் தகவலை அறிவித்த கோவா வானொலி, எந்தக் குற்றத்திற்காக அவர் தண்டிக்கப்பட்டார் என்பதைத் தெரிவிக்கவில்லை.

கடந்த வாரம் இதே இராணுவ நீதி மன்றம், மராட்டிய சோஷலிஸ்டு தலைவரான என். ஜி. கோரே என்பாருக்கு 10 ஆண்டுகள் கடுங்காவல் தண்டனையும், இதே அளவு அபராதமும் விதித்துத் தீர்ப்பளித்தது நினைவிருக்கலாம்.

லிமாயிக்கு விதிக்கப்பட்டுள்ள தண்டனைக்கு எதிராக லிஸ்பனிலுள்ள உயர்தர இராணுவ நீதி மன்றத்தில் 'அப்பீல்' வழக்குத் தொடரப்படும் என அவரது வழக்கறிஞர் அறிவித்திருக்கிறார்.

## திரு-கொச்சிக்கும் பட்டை நாமம்!

### 2-ம் திட்டம் பாதியாக வெட்டப்பட்டது

முதன் மந்திரியின் அதிருப்தியும், முயற்சியும்

திருவனந்தபுரம், அக். 4—

திரு-கொச்சி மாநிலத்திற்கும், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் 'பட்டை நாமம்' தீட்டப்பட்டிருக்கிறது.

ரூ. 1318 கோடி பெறுமான திட்டத்தினை, திட்டக் குழுவின் அங்கீகாரத்திற்காக, திரு-கொச்சி மாநில சர்க்கார் பிரதிநிதிகள் எடுத்துச் சென்றனர்.

திட்டக் குழுவினரோ, வழக்கம்போல, திட்டத்தை பாதியாக வெட்டி, ரூ. 66 கோடி பெறுமான திட்டத்தை மட்டுமே அங்கீகரித்திருக்கின்றனர்.

இது கண்டு அதிருப்தியடைந்த திரு-கொச்சி முதன் மந்திரி டில்லியிலேயே தங்கி திட்டக் குழுவினரிடம் மேலும் தொடர்ந்து பேச்சுவார்த்தைகள் நடத்தி, திட்டத்தின் மதிப்பை ரூ 85 கோடியாக நிர்ணயிக்குமாறு செய்திருக்கிறார் என்று இங்கு டில்லியிலிருந்து கிடைக்கும் தகவல்களிலிருந்து தெரிய வருகிறது.

## கசாப்புக்கடைக்காரர் 'ஸ்டிரைக்'!

சென்னையில் அக்டோபர் 1, 3 தேதிகளில் கசாப்புக் கடைக்காரர்கள் வேலைநிறுத்தம் செய்திருக்கின்றனர்.

## நெசவாளர் மீது போலீசார் தடியடிப் பிரயோகம்

விசைத் தறிகளுக்கு அனுமதி தந்ததின் எதிரொலி

திண்டுக்கல், அக். 4—

சின்னாளப்பட்டி பஞ்சாயத்து சபை, விசைத்தறிகளுக்கு அனுமதி வழங்கியதை எதிர்த்து ஊர்வலம் நடத்திய கைத்தறி நெசவாளர்கள் மீது போலீசார் தடியடிப் பிரயோகம் செய்திருக்கின்றனர்.

'ஊர்வலம் நடத்தக்கூடாது' என்ற தடையையும் மீறி, ஊர்வலம் நடத்தியதாக நெசவாளர் மீது குற்றஞ்சொல்லப்படுகிறது.

ஊர்வலமாக வந்தவர்களைக் கலைந்து செல்லுமாறு போலீஸ் அதிகாரிகள் மிரட்டினராம்; ஆனால், 'பலன்' இல்லாததினால், தடியடிப் பிரயோகம் செய்து ஊர்வலத்தைக் கலைத்தனராம்.

சுமார் 35 பேர்களைப் போலீசார் கைது செய்து, அவர்கள் மீது வழக்குத் தொடர்ந்திருக்கின்றனர் என்று தெரியவருகிறது.

Best copy available.

Roja Muthiah Research Library
3rd Cross Road, C P T Campus
Taramani, Chennai 600 113.

# நம் நாடு

தி.மு.க.தின இதழ் — ஆசிரியர் இரா.நெடுஞ்செழியன்

சென்னை 5—10—'55 புதன்


## சுதந்திர நாடுகளின் சிந்தனைக்கு!

இதுகாறும் எழுதப்பட்டுள்ள உலக வரலாற்றில், 'விடுதலைப் போராட்டங்கள்' என்ற தலைப்பில் அமையும் அத்தியாயத்திற்கே அதிகமான பக்கங்கள் ஒதுக்கப்பட்டுள்ளன; அந்தப் பக்கங்களில் பெரும் பகுதி, போரில் ஈடுபட்டவர்கள் சிந்திய செங்குருதியால் எழுதப்பட்டிருக்கின்றன; என்றாலும், 'விடுதலை தமக்கு மட்டுமே இருக்க வேண்டும்; யாரேனும் சிலரது விடுதலையை நாம் பறித்து வைத்திருக்க வேண்டும்' என்ற சிறுமதி படைத்த ஆதிபத்தியக்காரர்கள் பலர் உலகத்தில் இன்னமும் நீடித்து வாழ்ந்துகொண்டுதான் இருக்கின்றனர். வேடிக்கை என்னவெனில், இன்று, 'பிறருக்கு விடுதலை தரமாட்டோம்' என்று ஆணவம் பேசும் ஆதிபத்தியக்காரர்களில் பலர், ஒருகாலத்தில், தாங்கள் விடுதலை பெற வேண்டுமென்பதற்காகப் போரிட்டவர்கள் என்பதுதான்!

உலகத்தில் இன்றும் நடைபெறுகிற பல ஆதிபத்திய எதிர்ப்புப் போராட்டங்களுக்கும், ஆயுதந் தாங்கிய புரட்சிகளுக்கும் ஒளி விளக்காய் காட்சி தந்துகொண்டிருக்கும் மகத்தானதோர் புரட்சியை நடத்திக் காட்டிய நாடு பிரான்ஸ்!

அந்தப் பிரான்சு நாட்டில் இன்று, மக்கள் தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ளும் ஒரு விடுதலையோடு கூடிய ஆட்சி முறையைப் பெற்றிருக்கின்றனர்.

ஆனால், அந்த ஆட்சி முறைப்படி, பிரெஞ்சு ஆட்சிப்பீடத்தில் வீற்றிருப்போர், வேறு பல நாடுகள் தங்களின் 'காலனி'களாக—அடிமைக் காடுகளாக—சுரண்டல் பூமிகளாக விளங்கவேண்டும் என்று விரும்புகின்றனர்.

இந்தியா, இந்தோ-சீன பூமிகளில் அவர்களுக்கிருந்த ஆதிக்கப் பிடிப்பு அகற்றப்படுவதற்காக—பிடியில் அகப்பட்ட மக்கள், பிரெஞ்சுக்காரர்களின் வெறி தணியும் அளவுக்கும் போதுமான பலி தந்திருக்கின்றனர் என்றே சொல்லவேண்டும்.

என்றாலும், இன்னும் வட ஆப்பிரிக்காவில் தங்களுக்கு இருக்கும் காலனி ஆதிக்கப் பிடிப்பை அகற்றிக்கொள்ள மறுத்து வருகின்றனர். அவர்களது கடந்த கால அனுபவங்களே அவர்களுக்குப் பாடமாக அமைந்திருக்க வேண்டும்—என்று முன்பு நாம் இங்கு எழுதியிருந்தோம்.

அடிமைப்பட்ட மக்கள், தங்கள் விடுதலைத் தாகத்தைத் தணித்துக் கொள்வதற்காக, ஆதிக்கபுரியினருக்குத் தந்திருக்கிற விலை—காணிக்கை அளவற்றது; எத்தனை பலி கொடுக்க நேரிடினும், 'என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்' என்று கீதம் பாடுவரே தவிர, 'தாகம் தணியாமல் அடங்கியதில்லை' என்பதை, பிரெஞ்சு நாட்டு ஏகாதிபத்தியவாதிகள் அறியாதவர்களல்லர்!

என்றாலும்கூட, அவர்கள், தங்களின் போலிப் பெருமையையும், சுரண்டலையும்தான் பெரிதென மதிக்கின்றனரே யன்றி, வட ஆப்பிரிக்க மக்களின் விடுதலைத் தாகத்தை மதிக்க மறுத்து வருகின்றனர்.

எத்தனையோ மதிப்பற்ற உயிர்களைப் பலிகொண்ட பின், டுனீசியாவிற்கும், மொராக்கோவிற்கும் ஓரளவு சுதந்திரத்துடன்கூடிய சுயாட்சி வழங்க இணங்கிய பிரான்ஸ், வட ஆப்பிரிக்காவில் தன் ஆதிக்கப் பிடிப்பிலிருக்கும் அல்ஜீரிய மக்களுக்கும் சுயாட்சி வழங்குவதின் மூலம், தங்களை, 'காலத்தை உணர்ந்தவர்கள்—விடுதலையின் மாண்பறிந்தவர்கள்'—என்று காலங் கடந்தேனும் தங்கட்கு உணர்த்துவர் என்றே விடுதலை விரும்பிகள் நம்பிக் கிடந்தனர்; ஆனால் நடந்தது என்ன?

'அல்ஜீரிய சிக்கலை ஐ. நா. சபை விவாதிக்க வேண்டும்' என்றபோது, ஐ. நா. ஆயத்தக் குழு, 'அது பிரான்சின் உள்நாட்டு விவகாரம்; வெளிநாட்டு விவகாரங்களை மட்டுமே ஐ. நா. விவாதிக்க முடியும்!' என்று கூறி, நிராகரித்துவிட்டது. பின்னர், 'அல்ஜீரிய சிக்கல் ஐ. நா.-வில் விவாதிக்கப்பட வேண்டிய ஒன்றே,' என்று, ஐ. நா.-வில் உள்ள ஆசிய — ஆப்பிரிக்க நாடுகள் கருதியதால், ஐ. நா. விவாதிக்க வேண்டிய நிகழ்ச்சிப் பட்டியலில், அல்ஜீரிய சிக்கலும் இடம் பெறுமாறு செய்தன; ஐ. நா. பொதுச் சபை, ஒரு வாக்கு அதிகத்தில், 'அல்ஜீரிய சிக்கலை விவாதிக்க வேண்டும்,' என்ற தீர்மானத்தை நிறைவேற்றியது; ஆனால், பிரான்ஸ், அந்தத் தீர்மானத்தை ஏற்றுக்கொள்ள மறுத்து, 'பொதுச் சபைக் கூட்டத்தில் எங்கள் நாட்டுப் பிரதிநிதிகள் கலந்துகொள்ள மாட்டார்கள்' என்று கூறி, பிரதிநிதிகளைத் தாயகத்திற்கு அழைத்துக் கொண்டுவிட்டது.

இப்படிச் செய்வதின் மூலம் ஐ. நா. பாதுகாப்பு சபையில் ஒரு நிரந்தர உறுப்பினராக உள்ள பிரான்ஸ், 'ஐ. நா. பொதுச் சபை வேலை செய்வதற்கு இயலாத நெருக்கடியை உண்டுபண்ணலாம்' என்று நினைக்கிறதென்றே தோன்றுகிறது.

வலிமை மிகுந்த நாடாக ஐ. நா.-வில் விளங்கிக்கொண்டிருக்கும் பிரான்சின் இந்தப் போக்கு குறித்தும், இது போன்ற இதர வல்லரசுகளின் வக்கரிக்கும் போக்கு குறித்தும், அந்த வல்லரசுகளின் நிழலில்தான் தங்கள் 'பெருமை' ஒளிவிடுவதாக நினைத்துக் கொண்டிருக்கும் சின்னஞ்சிறு சுதந்திர நாடுகள் தீவிரமாக சிந்தித்தாக வேண்டும்; இல்லையேல், ஐ. நா. சபை தொடர்ந்து, பெரும் வல்லரசுகளின் கைப் பாவையாக இருக்க முடியுமே தவிர, அது நிறுவப்பட்ட அடிப்படையான நல்ல நோக்கங்கள் பல ஏட்டளவில்தான் இருக்க முடியுமே தவிர, உண்மையில் நடைமுறைக்கு வர இயலாதனவாகிவிடக் கூடும்.

நியாயத்தை நிலைநாட்ட எந்தவிதத்திலும் அச்சப்படுவது விடுதலை விரும்பிகளால் ஏற்றுக்கொள்ளப்பட முடியாதது என்பதை வல்லரசுகளின் பொம்மைகளாக விளங்கும் சிறிய சிறிய சுதந்திர நாடுகள் சீக்கிரமே உணர்ந்தாக வேண்டும்.

'அல்ஜீரிய சிக்கல் தனது உள்நாட்டு விவகாரம்' என்ற பிரான்சின் கூற்று எவ்வளவு உண்மையானது என்பதை அடுத்து எழுதுவோம்.

## பீகார் மாணவர்கள் சத்தியாக்கிரகம்

### 12-ந் தேதி முதல் ஆரம்பம்

பாட்னா, அக். 3—

பீகார் மாணவர் நடவடிக்கைக் குழு, இம்மாதம் 12-ந் தேதி முதல் சத்தியாக்கிரகம் ஆரம்பிப்பதென்று தீர்மானித்திருக்கிறதாம்.

எந்த உருவத்தில் சத்தியாக்கிரகம் இருக்கும் என்பதை நடவடிக்கைக் குழுவின் தீர்மானம் குறிப்பிடவில்லை.

'ஆயிரக்கணக்கான சகோதர மாணவர்கள் கைது ஆவார்கள்,' என்று, மாணவர் நடவடிக்கைக் குழுத் தலைவர் குறிப்பிட்டுள்ளார்.

தங்களுடைய கோரிக்கைகள் சிலவற்றை மாநில சர்க்கார் இன்னும் ஏற்காமல் இருப்பதை ஆட்சேபித்தே இந்த சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்படுகிறதாம்.

## சென்னை துறைமுகத் தொழிற்சாலை

### புதிய இயந்திர சாதனங்கள் வாங்குவதற்குத் திட்டம்

சென்னை, செப். 3—

சென்னை துறைமுகத் தொழிற்சாலைக்குப் புதிய இயந்திரச் சாதனங்கள் வாங்குவதற்குரிய ஒரு திட்டத்திற்கு இந்திய சர்க்கார் அனுமதி அளித்துள்ளனராம்; ரூ. 5,16,000 இதற்கெனச் செலவாகுமாம்.

சென்ற ஏழு வருடங்களில் புனர் வாழ்விப்பு நிதி நிர்வாகத்தினர் கிழக்கு பாகிஸ்தானிலிருந்து வந்த அகதிகளுக்கு ரூ. 2,75,87,000-மும், மேற்கு பாகிஸ்தானிலிருந்து வந்துள்ள அகதிகளுக்கு ரூ 6,93,75,000-மும் கடனைக் கொடுத்திருக்கிறார்கள்.

## ஐதராபாத் மந்திரிசபைமீது கண்டனத் தீர்மானம்

### சட்டசபையில் எதிர்க் கட்சியினர் கொண்டுவந்தனர்

ஐதராபாத், அக் 3—

ஐதராபாத் மாநில மந்திரி சபை மீது, இன்று சட்டசபையில், எதிர்க் கட்சித் தலைவர் வி. டி. தேஷ்பாண்டே கண்டனத் தீர்மானம் ஒன்றைக் கொண்டு வந்திருக்கிறார் எனத் தெரிகிறது.

"மந்திரி சபையின் கொள்கைகள் ஜனநாயக விரோதமானவையாகவும், நிலப் பிரபுக்களையும்—முதலாளிகளையும் ஆதரிப்பவையாகவும் உள்ளன என்பதால் அவற்றை நாங்கள் ஏற்றுக்கொள்ள இயலாது," என்று தீர்மானம் தெரிவித்திருக்கிறது.

## இருபதாம் நூற்றாண்டிலும் இந்த அதிசயம்!

இருபதாம் நூற்றாண்டில், மோட்டாரைப் பார்த்து, 'அது ஒரு பயங்கர மிருகம்' என்று பயந்தோடும் மக்கள் இருக்கிறார்கள் என்றால் ஆச்சரியமாகத்தான் இருக்கும்; ஆனால், இந்த அனுபவம் பிரதமர் நேருவின் மகள் இந்திரா காந்திக்கும் ஏற்பட்டதாம்.

அசாம் பகுதியில் வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பிரதேசத்தைப் பார்வையிட ஜீப் கார் ஒன்றில் அவர் சென்றிருந்தபோது, அதைக் கண்டதும் அந்தப் பகுதியிலுள்ள பழங்காலக் குடிமக்கள் பயந்து நடுங்கி ஒளிந்துகொள்ள முற்பட்டனராம்.

இந்த ஜீப் கார் ஏதோ ஒரு பயங்கர மிருகமென்றும், நெருங்கினால் என்ன செய்துவிடுமோ என்றும் அஞ்சி, அந்த மக்கள் மிரண்டுவிட்டனராம்; மோட்டாரையே இதற்கு முன்பு அவர்கள் பார்த்தது கிடையாதாம்.

இது பயங்கர மிருகமல்லவென்றும், வாகனமென்றும் எவ்வளவோ விளக்கியும்கூட அவர்களுடைய நடுக்கம் நிற்கவில்லையாம்; அதன் அருகில் வருவதற்குக்கூட அவர்கள் அஞ்சினராம்!

## 29 இலட்சம் பேர் வெளியேறினராம்!

கல்கத்தா, அக். 3—

கிழக்கு வங்கத்திலிருந்து இந்துக்கள் வெளியேறிவருவது, தொடர்ந்தாற்போல் நடைபெற்று வருகிறதாம்!

இதுவரையில், 29 இலட்சம் அகதிகள் வெளியேறி வந்திருப்பதாகக் கூறப்பட்டுள்ளது.

## திபேத்திற்கு சுயாட்சி!

ஹாங்காங், அக் 3—

சீனக் குடியரசுக்கு உட்பட்ட திபேத்திற்கு 'அளவிட்ட சுயாட்சி' வழங்கப்படுமாம்!

வட்டார சுதந்திரத்திற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்காக தலைநகரான லாசாவில், கடந்த வெள்ளியன்று கூடிய 40 சீன, திபேத் பிரதிநிதிகள் மாநாட்டில் ஒரு குழு நியமிக்கப்பட்டிருக்கிறது.

இந்த ஏற்பாடுகள் தலைலாமாவின் விருப்பப்படியும், 17 வயதான மன்னரான பஞ்சன் லாமாவின் விருப்பப்படியும் ஏற்பாடு செய்யப்படுகிறதாம்.

## பாகிஸ்தானின் இன்றைய நிலைமை

### எகிப்து துணை அமைச்சர் விவரிக்கிறார்

"இந்தியாவைப் பற்றிய அச்சத்தினாலேயே, மேற்கு நாடுகளின் இராணுவக் குழுவில் தாங்கள் சேர்ந்து கொண்டிருப்பதாகப் பாகிஸ்தான் தலைவர்கள் கூறுகின்றனர்; ஆனால், இதற்கு மூல காரணமாக இருப்பது மேலைய நாடுகள் என்பதை அவர்கள் உணரவில்லை,"

என்று, எகிப்தின் துணைப் பிரதமர் கமால் சலேம் குறிப்பிட்டுவிட்டு, மேலும் சொன்னார்:—

"பாகிஸ்தானில் உள்நாட்டுப் பூசல்கள் அதிகரித்துள்ளன; கிழக்கு—மேற்கு பாகிஸ்தான்களுக்கிடையே அடிக்கடி மோதுதல்கள் ஏற்பட்டு வருகிறது; இந்த நிலைமையைப் பிரிட்டனும், அமெரிக்காவும் பயன்படுத்திக் கொள்ளுவது, மக்களின் வேதனையை அதிகரிக்கச் செய்துவிட்டது."

## மாநிலங்களுக்குக் கல்வி மானியம்

புதுடில்லி, அக் 3—

இடைநிலைக் கல்வி திருத்தி அமைப்புக்கான தனது திட்டத்தின்படி இந்தியப் பேரரசின் கல்வி இலாகா 16 மாநில சர்க்கார்களுக்கு 1955—56ம் ஆண்டிற்கு மானியமாக ரூ 3,83,29,547 வழங்கி இருக்கிறது என்று அதிகாரபூர்வமாகத் தெரியவருகிறது.

இந்த மானியத்தில் அதிகமான பங்கு மேற்கு வங்கத்திற்குத் தரப்பட்டிருக்கிறது — ரூ. 91,36,176; பம்பாய் இரண்டாவதாக அதிகம் பெறுகிறது — ரூ. 61,72,350; மூன்றாவதாக அதிகம் பெறுவது திரு-கொச்சி—ரூ. 41,26,755

உத்திர பிரதேசம், சென்னை, மைசூர், பீகார் பஞ்சாப், கூர்ஜரம் ஆகிய மாநிலங்களின் மானியத்திற்கான திட்டங்கள் பரிசீலனையிலிருக்கின்றனவாம்.

இராஜஸ்தானிலிருந்து திட்டங்கள் திருத்தி இன்னும் வந்தபாடில்லையாம்; இன்னும் டில்லி, இமாசலப் பிரதேசம், மணிப்பூர், மத்திய பாரத், ஜம்மு—காஷ்மீர் ஆகிய சர்க்கார்களிடமிருந்து திட்டங்கள் பரிசீலனைக்கு வந்து சேரவில்லையாம்.

## 'பழைமைக்குச் சப்பைக்கட்டா? புதுமைக்கு வரவேற்பா?'

"மதச் சடங்குகள், தேர் திருவிழாக்கள், மண விழாக்கள் போன்றவற்றிற்காகக் கோடிக்கணக்கான மக்கள் தங்கள் பணத்தை வீண் செலவு செய்வதைத் தடுப்பது எப்படி என்பதைக் கண்டறிய ஒரு குழு நியமிக்கப்படும்—என்று, திட்ட மந்திரி குல்ஜாரிலால் நந்தா அண்மையில் அறிவித்திருக்கிறார்; ஆனால், சர்க்கார், தாங்கள் வீண் செலவு செய்யும் பணத்தைப் பாழாகாமல் தடுக்க என்ன செய்யப்போகிறார்கள்?

"அடுத்த ஆண்டு, புத்தர் பிறந்த நாள் விழாவிற்காக, சர்க்கார், சுமார் ஒரு கோடி ரூபாய் செலவிடப் போவதாக அறிவித்திருப்பது திகைப்பைத் தருகிறது;

'ஆளும் கட்சியினர், தங்கள் வருடாந்திரக் கூட்டங்களுக்குச் செலவிடும் தொகையின் அளவைக் கண்டால் திகைப்பும், ஆச்சரியமும் ஏற்படுகிறது;

"சோஷலிச மாதிரி சமூகத்தை அமைப்பதே எங்களின் கொள்கை—எனக் கூறும் சர்க்கார், புதுடில்லியில் அடுத்த ஆண்டு நடைபெறவிருக்கும் மாநாட்டிற்கு வரும் பிரதிநிதிகள் தங்குவதற்காக ஒரு கோடி ரூபாய் மூலதனத்துடன் அமையவிருக்கும் உணவு விடுதியைக் கட்டுவதற்காக உதவி புரியப் போகின்றனர் என்று இப்போது செய்தி வருகிறது;

"பன்னெடுங்கால மூடப் பழக்கங்களைக் கைவிட்டு விட்டு, நவீன கால மனிதர்களாகுமாறு மக்களுக்குத் தொடர்ந்து உபதேசம் புரிகிற சர்க்கார், தாங்களே மக்களுக்கு ஒரு முன் மாதிரியாக நடந்துகொள்வது நல்லதாகும்."

—என்று, கே. இராமசாமி சர்மா என்பார், 'இந்து' இதழ்—1955 அக்டோபர் 4-ந் தேதி வெளியீட்டில் எழுதியுள்ள கடிதம் ஒன்றில் குறிப்பிட்டிருக்கிறார்.

## மாஸ்கோ பயணத்தை ஒத்திப்போட்டதேன்?

ரஷ்யாவிற்குச் செல்லவிருந்த பிரெஞ்சுப் பிரதமரும், வெளிநாட்டு இலாகா அமைச்சரும், திடீரெனத் தங்கள் பயணத்தை ஒத்திப் போட்டுவிட்டனர்.

அல்ஜீரியா பிரச்சினையை ஐ.நா. பொதுச் சபை விவாதிக்க வேண்டுமென்பதை ஆதரித்து, ரஷ்யா வாக்கு அளித்ததே இதற்குக் காரணமாக இருக்கக்கூடுமாம்.



## எகிப்து பிரதமரின் 'உரிமைக் குரல்'

### எல்லைகளைப் பாதுகாக்க வலிமை மிக்க இராணுவம் திரட்டப்படுமாம்!

எகிப்து மக்கள் அடிமைகளாக இருக்கவேண்டுமென விரும்பும் நாடுகளுக்கு எச்சரிக்கை

"மேற்கு வல்லரசுகள், இஸ்ரேலுக்கு ஆயுதங்கள் கொடுத்து உதவின; எகிப்துக்குத் தர மறுத்தன; 'என்றைக்கும் எகிப்து மக்கள் மேற்கு வல்லரசுகளின் அடிமைகளாக இருக்க வேண்டும்—அவர்களின் செல்வாக்கிலும், தயவிலும் வாழ வேண்டும்'—என்பதற்காகத்தான், எங்களுக்கு ஆயுத உதவி மறுக்கப்பட்டது; ஆனால், ஆயுத பலத்தை நாங்கள் பெருக்கிக் கொண்டே போகப்போகிறோம்; எங்கள் எல்லைகளைப் பாதுகாக்க வலிமைமிக்க இராணுவத்தைத் தயாரிக்கவே ஆயுத பலத்தைப் பெருக்கப் போகிறோமேயன்றி, ஆக்கிரமிப்புக்காக அல்ல;

"மத்தியக் கிழக்கில் குழப்பம் ஏற்படுத்துவது எங்கள் உத்தேசமல்ல; நாங்கள் போரை விரும்பவில்லை; ஆனால், எங்கள் எல்லைகளைப் பாதுகாக்க வலிமைமிக்க இராணுவம் எங்களுக்குத் தேவை; அந்நிலையிலுள்ள இராணுவத்தை ஏற்படுத்தியே தீருவோம்,"

என்று, எகிப்து பிரதமர் கர்னல் நாசர், அணிவகுப்பு ஒன்றின் போது பேசுகையில் குறிப்பிட்டுள்ளார்.

மேலும் அவர் சொன்னார்:—

"கடந்த பிப்ரவரியில், எகிப்து மீது முழுத் தாக்குதல் நடத்துவதற்கு இஸ்ரேல் நாடு திட்டமிட்டிருந்தது; ஆனால், இத்திட்டத்திற்கு எதிராக, இஸ்ரேல்மீது படையெடுக்க சிரியா இராணுவத்திற்கு உத்திரவிடப்படவே, எகிப்துமீது இஸ்ரேல் போர் தொடுக்கவில்லை; இதுபற்றிய இரகசியக் 'குறிப்பு' எகிப்து இரகசிய இலாகாவிடம் சிக்கியுள்ளது;

"இஸ்ரேலுக்கு பிரிட்டிஷ், அமெரிக்க உதவி கிடைத்துள்ளன என்பதைத் தெரிவிக்கும் பிரெஞ்சு இராணுவ இரகசியக் 'குறிப்பு'களையும் எகிப்து இரகசிய இலாகா கைப்பற்றியுள்ளது; இஸ்ரேலுக்கு 200 பிரிட்டிஷ் 'ஜெட்' விமானங்கள், 20 வேட்டை விமானங்கள், இராணுவப் போக்குவரவு விமானங்கள், 100 அமெரிக்க-ஜெர்மன் டாங்கிகள், 15 சர்ச்சில் டாங்கிகள், 100 கவச மோட்டார்கள், 70 துப்பாக்கிகள் முதலியன அளிக்கப்பட்டிருக்கின்றன; இஸ்ரேலுக்கு ஆயுதங்களும், இராணுவச் சாதனங்களும் தருவது — எகிப்துக்கு வெறும் 'வாக்குறுதி'யைத் தருவது—மத்தியக் கிழக்குப் பிரதேசத்தில் மேற்கு வல்லரசுகள் இராணுவச் சமபல நிலைமையைப் பராமரிக்கும் இலட்சணம் இதுதான்."

★

## 'ஒருவர் உரிமையில் மற்றவர் தலையீடா?'

### மேற்கு நாடுகள் குறிப்பு: ரஷ்யா நிராகரிப்பு

"தன்னுடைய சொந்தப் பாதுகாப்புக்கு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளவும், தேவையான ஆயுதங்களை மற்ற நாடுகளினின்றும் வாங்கிக்கொள்ளவும் எந்த நாட்டிற்கும் உரிமை உண்டு; இதில் தலையிடுவதற்கு எந்த அந்நிய நாட்டிற்கும் உரிமை கிடையாது,"

என்று, எகிப்துக்கு ரஷ்யாவும், செக் நாடும் ஆயுதங்கள் தரவிருப்பது பற்றிய, மேற்கு நாடுகளின் ஆட்சேபணையை நிராகரிக்கையில் ரஷ்யா குறிப்பிட்டுள்ளது.

## நிபந்தனையின்றியே ஆயுதங்கள் தரப்படுகிறதாம்!

### செக் நாட்டு அழைப்பை எகிப்து பிரதமர் ஏற்றுக்கொண்டாராம்!

எந்தவிதமான அரசியல் மற்றும், வேறு எவ்விதமான நிபந்தனைகளும் இன்றியே எகிப்துக்கு செக்கோஸ்லோவேகியா ஆயுதங்கள் தருகிறதாம்!

செக் நாட்டிற்கு வருகை தருமாறு அந்நாட்டு சர்க்கார் அனுப்பியிருந்த அழைப்பை, எகிப்து பிரதமர் நாசர் ஏற்றுக்கொண்டுவிட்டாராம்.

★

## இஸ்ரேல் அச்சம்

### எகிப்துக்கு எதிராக தன்னைப் பலப்படுத்திக் கொள்ளுமாம்

பண்டமாற்று முறையிலோ, அல்லது வேறு எவ்வித நிலையிலோ எகிப்து, ஆயுதங்களை விலைக்கு வாங்குவது உண்மையெனத் தெரிந்தால், இஸ்ரேல் நாடும் ஆயுதங்களை விலைக்கு வாங்கி தன்னைப் பலப்படுத்திக் கொள்ளும் எல்லா நடவடிக்கைகளையும் மேற்கொள்ளுமாம்.

## கைத்தொழில் அபிவிருத்தி

### மத்திய சர்க்கார் மேலும் மானியம் வழங்குகிறது

புதுடில்லி, அக். 2—

கைத்தொழில் அபிவிருத்திக்காக மாநில சர்க்கார்களுக்கும், அகில இந்தியக் கைத்தொழில் கழகத்திற்கும் இந்தியப் பேரரசு மேலும் கடனாகவும், மானியமாகவும் ரூ. 4,30,000 வழங்கியுள்ளது.

அகில இந்தியக் கைத்தொழில் கழகம் செய்த சிபாரிசுகளின் பேரில் சென்னைக்கு இரண்டு மானியங்கள் வழங்கியிருப்பதாகத் தெரிகிறது. ரூ. 1,50,050 ஒரு மானியமும், ரூ. 3,680 மற்றொரு மானியமும் வழங்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

## ஈரான் மன்னரும் ரஷ்யா செல்கிறார்

ஈரான் மன்னர் ஷாவும், இராணியும் அடுத்த ஜூன் அல்லது ஜூலையில், மாஸ்கோவுக்குச் செல்வார்களாம்!

ரஷ்யாவுக்கு வருகை தருமாறு, அந்நாட்டின் தலைவர் விடுத்த அழைப்பை மன்னர் ஏற்றுக்கொண்டாராம்.

## மொராக்கோவில் கடும் போர்

### விமானங்கள், டாங்கிகள் ஈடுபட்டன

ரபாப், அக். 3—

மொராக்கோ நாட்டின் கிளர்ச்சியாளர்கள், அட்லாஸ், ரிப் மலைப் பிராந்தியங்களிலுள்ள பிரெஞ்சுக்காரர்களின் குடியிருப்புகளைத் தாக்க ஆரம்பித்துவிட்டனராம்!

ஏராளமான படைகளை, உடனடியாகப் பிரெஞ்சு சர்க்கார் அங்கு அனுப்பிவைத்துள்ளனர்.

இம்மோஜர் என்னுமிடத்தில், கடுமையான போர் மூண்டுள்ளதாம்; இப்பகுதியில், பிரெஞ்சுக்காரர்கள், டாங்கிகள், விமானங்கள், துருப்புகள் ஆகியவற்றை ஈடுபடுத்தி, பெரும்போர் செய்கின்றனர். 100 பேர் கொல்லப்பட்டிருக்கலாமென உறுதிபடுத்தப்படாத செய்திகள் கூறுகின்றனவாம்.

## நில உடைமைக்கு அதிக அளவு வரம்பு

### நிர்ணயிப்பதற்கு இந்திய அரசாங்கத்தின் முடிவு

புதுடில்லி, அக். 3—

அதிகமான அளவு, நில உடைமைக்கு வரம்பு நிர்ணயிப்பதற்கு இந்திய அரசாங்கம் முடிவு செய்திருக்கிறதாம்.

நில உடைமையை எவ்வளவாக நிர்ணயிக்கலாம் என்பது பற்றி ஆராய்வதற்கு எல்லாக் கட்சி உறுப்பினர்களும் கொண்ட குழு ஒன்றை அரசாங்கம் அமைத்திருக்கிறதென்றும், திட்டக் குழுவும் இக்கொள்கையை ஏற்றுக் கொண்டுள்ளதென்றும், கூடிய விரைவில் இதுபற்றி அரசாங்கம் ஓர் முடிவிற்கு வர விரும்புகிறதென்றும், மக்கள் சபையில், உணவு, விவசாயத் துறை அமைச்சர் ஏ. பி. ஜெயின் அறிவித்தார்.

## 'கதவடைப்பு நியாயமாகாது'

### சென்னை 1-வது வட்ட தி. மு. கழக வேண்டுகோள்

'இந்துஸ்தான் ரோலிங் அண்டு ரிபைனரிங் மில்ஸ்' தொழிற்சாலை முதலாளிக்கும்—தொழிலாளிகளுக்குமிடையே எவ்வித மனக்கசப்பும் இல்லாதிருந்தும் தொழிலகத்தின் ஒரு பிரிவை மூடிவிட்டது நியாயமாகாது; எனவே, தொழிற்சாலையை உடனடியாகத் திறக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்வதுடன், இதனால் பாதிக்கப்பட்டு வேலை இழந்த தொழிலாளர்களுக்குத் தனது அனுதாபத்தையும் சென்னை 1-வது வட்ட தி. மு. கழகக் கிளை தெரிவித்துக் கொள்கிறது. அத்துடன் இப்பிரச்சினையில் உடனடியாகச் சர்க்கார் தலையிட்டு நல்ல முடிவு காணும்படியும் வேண்டிக்கொள்கிறது. (ந கி.)

## மூன்று நிறுவனங்களின் கூட்டுறவில் சென்னையில் உப்புத் தாள் தொழிற்சாலை

### உற்பத்தியாகும் பொருள்கள் முதல்தரமானதாக இருப்பதற்கு அதிகக் கவனம் செலுத்தப்படும்

சென்னை திருவொற்றியூரில் ரூ. 50 இலட்சம் செலவில் உப்புத் தாள் (பட்டறைச் சீலை) தொழிற்சாலை ஒன்று நிறுவப்பட்டிருக்கிறது. மூன்று நிறுவனங்களின் கூட்டு முயற்சியினால், இத்தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது; மைசூர் 'இராஜப் பிரமுகர்' இதனைத் திறந்துவைத்தார்.

27 ஏகரா பரப்பளவுள்ள இடத்தில் நிர்மாணிக்கப்பட்டிருக்கும் இத்தொழிற்சாலையில், சாணைக்கல் உற்பத்திக்கு ஒரு பிரிவும், உப்புத்தாள் தயாரிப்பதற்கு மற்றொரு பிரிவும் இருக்கின்றன.

இவைகளைத் தயாரிக்கும் முதல் தொழிற்சாலை, தென்னாட்டில் இதுவேயாகும்.

மொத்த முதலீட்டில் 49 சதவிகிதப் பங்கை பிரிட்டிஷ், அமெரிக்க நிறுவனங்களும், எஞ்சிய பகுதியை சென்னை நிறுவனமும் ஏற்கும்; முதலீட்டுடன், அந்நிய நிபுணர்களின் தொழில் உதவியும் கிடைக்கும்.

உற்பத்தியாகும் பொருள்கள் எல்லா வகையிலும் முதல்தரமாக இருக்க வேண்டுமென்பதில் அதிகக் கவனம் செலுத்தப்படுமாம்.

## குடியேற்றத்தில் பொதுச்செயலாளர்

### மாநில மாநாட்டிற்கு நிதியளிப்பு

தி. கழகப் பொதுச் செயலாளர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள் 27—9—55 மாலை 4 மணியளவில் குடியேற்றம் வந்தார். கழகத் தோழர்கள் பலர் அவரை எதிர்கொண்டழைத்து நகர தி. மு. கழக அலுவலகத்திற்கு அழைத்து வந்தனர். சிற்றுண்டி அருந்தி, சிறிது ஓய்விற்குப் பின், மாலை 4½ மணிக்கு பொதுச் செயலாளர் அவர்கள் 'மக்கள் மறுமலர்ச்சி மன்ற'த்தைத் திறந்துவைத்தார்.

**நகர சபை வரவேற்பு**

மாலை 5 மணிக்கு, குடியேற்றம் நகர சபைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். நகர சபைத் தலைவர் சாமிநாதன் அவர்கள் தலைமையில் நகர சபையின் சார்பில் வரவேற்பிதழ் வாசித்தளிக்கப்பட்டது. வரவேற்பிற்கு நன்றி தெரிவித்து பொதுச் செயலாளர் அவர்கள் சொற்பொழிவாற்றினார்.

**பொதுக் கூட்டம்**

மாலை 6 மணிக்கு ஆற்றில் நகர தி. மு. கழகச் செயலாளர் தோழர் இரா. சாரங்கபாணி தலைமையில் மாபெரும் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

**மாநில மாநாட்டிற்கு நிதி**

நகர தி. மு. கழம் ரூ. 150 பகுத்தறிவு இளைஞர் மன்றம் (குடியேற்றம்) ரூ. 25; குடியேற்றம் பஞ்சாலைத் தொழிலாளர்கள் ரூ. 33—9—6; மக்கள் மறுமலர்ச்சி மன்றம் 301 காலணா; பீடித்தொழிலாளர் 101 காலணா; கைத்தறி ஆதரவாளர் 101 காலணா; ஆக மொத்தம் ரூ. 216—7—6ம் மாநில மாநாட்டு நிதியாக பொதுச் செயலாளரிடம் அளிக்கப்பட்டது.

மற்றும் மேல் ஆலத்தூர் பாய் செய்யும் தொழிலாளர்கள், மாசிலா உடற் பயிற்சி சங்கம், கைத்தறி நெசவாளர், மற்றும் பல அமைப்புகள் சார்பில், வாழ்த்து இதழ்கள் வாசித்தளிக்கப்பட்டதுடன், மலர் மாலைகளும் அணிவிக்கப்பட்டன

பொதுச் செயலாளர் அவர்கள் எல்லோருக்கும் நன்றியும் வணக்கமும் தெரிவித்துக் கொண்டு, நிதி திரட்டிய நண்பர்களைப் பாராட்டியும், நிதி கொடுத்துதவிய தோழர்களுக்கும் நகர பொதுமக்களுக்கும் நன்றியறிதலையும் தெரிவித்துக் கொண்டார்.

கட்டுப்பாடு எடுக்கப்பட்டதற்குப் பின், வெள்ளைச் சர்க்கரையின் உபயோகத் தேவை 1952-ம் ஆண்டு இறுதியில் 10 இலட்சம் டன்னாக இருந்தது—1953-54ல் 18,30,000 டன்னாக உயர்ந்தது.

## மதுரை—சிங்காரவேலர் நினைவுப் படிப்பகம்

1—10—55 இரவு 9 மணியளவில் கூடிய, மதுரை கோரிப்பாளையம், பிள்ளையார் கோயில் தெருவிலுள்ள மேற்படி படிப்பகத்தில் நடைபெற்ற படிப்பகச் செயற்குழுக் கூட்டத்தில், 27—10—55 அன்று நடைபெறும் மதுரை நகராண்மைக் கழகத் தேர்தலில், வாக்காளர்கள் தங்கள் வாக்குகளைத் தவறாது நல்ல முறையில் வழங்க, தொழிலாளர், வணிக ஊழியர், அரசாங்க ஊழியர், மாணவர், இன்னபிற பணிபுரியும் யாவருக்கும் 27—10—55ம் நாளைப் பொது விடுமுறையாக விடுத்து மக்களாட்சியின் மாண்பை வளர்க்க அரசியலார் ஆவன செய்யும்படி வேண்டிக்கொண்டு தீர்மானம் ஒன்று நிறைவேற்றப்பட்டது.

## அறிவியக்க மன்றம்

2—10—55 காலை 10½ மணிக்கு சென்னை 27-வது வட்டம் அறிவியக்க மன்றச் சொற்பயிற்சிக் கூட்டத் துவக்க விழா தோழர் அ. சங்கரன் தலைமையில் சென்னை பூங்கா நகர், அனுமந்திராயன் கோயில் தெரு, 32 எண்ணுள்ள இல்லத்தில் நடைபெற்றது. 'அறிவு' என்றும் பொருள் பற்றி மன்றத் தோழர்கள் பலர் சொற்பொழிவாற்றினர்.

## கரூரில் விற்பனையாளர் சங்க ஆரம்ப விழா

வெற்றிலை, பாக்கு, பீடி, சிகரெட், வர்த்தகர்களின் அடிப்படை நெருக்கடிகளையும், அரசாங்கத்தின் வரி விதிப்பு உயர்வுகளையும் தவிர்ப்பதற்காக கரூர் அம்பிகைடாக்கீஸில் 2—10—55 காலை 10 மணிக்கு, மேற்கண்ட வர்த்தகர்களின் சங்க ஆரம்ப விழா, திரு. பாலவெங்கட்டராமன் தலைமையில் நடைபெற்றது. திரு. கிருஷ்ணமூர்த்தி, திரு. கே. செல்லமுத்து ஆகியோரை முறையே தலைவராகவும் செயலாளராகவும் கொண்ட நிர்வாகக் குழு தேர்ந்தெடுக்கப்பட்டது. திரு. வி. கே. தாஸ், திரு. கே. செல்லையா ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## திருவள்ளுவர் மன்றம்

2—10—55 பகல் 2 மணிக்கு திருச்சி, சின்ன செட்டி தெரு, திருவள்ளுவர் மன்ற நிர்வாகக் குழு உறுப்பினர் தேர்தல் கூட்டம் சித்தி விநாயகர் ஆலயத்தில் நடைபெற்றது. தோழர் கோ. அ. கோவிந்தன் நடுவராக இருந்தார். தோழர் ச. ரெங்கராசனைச் செயலாளராகக் கொண்ட குழு தேர்ந்தெடுக்கப்பட்டது.

## 'தினத்தந்தி'க்கு மறுப்பு

"'சென்னை—இராயப்பேட்டை (37-வது வட்டம்) நகரசபைத் தேர்தலில், திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்த டி. டி. அரசு சுயேச்சையாக நின்று தோல்வியடைந்தார்' என்று 28—9—55 சென்னை 'தினத்தந்தி' இதழில் வெளிவந்துள்ள செய்தி தவறானதாகும். தோழர் டி. டி. அரசு தி மு. கழக உறுப்பினரல்ல; எந்தக் கட்சியையும் சேராதவரும் ஆவார். அவர் திராவிட முன்னேற்றக் கழகத்தைச் சேர்ந்தவர் என்று 'தினத்தந்தி' இதழில் வெளிவந்துள்ள செய்தி தவறானது என்பதை இதன்மூலம் பொதுமக்களுக்கு தெரியப்படுத்திக் கொள்வதுடன், இதுபோன்ற தவறான செய்திகளைப் பிரசுரித்த 'தினத்தந்தி' இதழின் செயலை வன்மையாகக் கண்டிக்கிறோம்"

என்று, சென்னை 37-வது வட்டம் (இராயப்பேட்டை) தி மு. கழகக் கிளைச் செயலாளர் தோழர் கோ. இளவரசு தெரிவித்துக் கொள்கிறார்.

## அன்பளிப்பு

'நம் நாடு' வளர்ச்சிக்கென குன்னூர் தோழர் கா. கிருட்டிணசாமி அவர்களால் அன்பளிக்கப்பட்ட ரூ. 2 வரப்பெற்றோம்—நன்றி—பொறுப்பாளர்.

## திருமணம்

விழுப்புரம் வட்டம் பள்ளியநேலியனூர் தோழர் துலுக்காணம்—தோழியர் தமிழரசி திருமணம் தோழர் கா. நாமதேவன் தலைமையில் நடைபெற்றது. திருமணத்தின் நினைவாக 'நம் நாடு' வளர்ச்சிக்கு ரூ. 1 நன்கொடை தரப்பட்டது—வரப்பெற்றோம் —நன்றி—பொறுப்பாளர்.

## அனுதாபம்

சென்னை தொண்டையார்பேட்டை 1-வது வட்டம் தி. மு. கழகக் கிளைத் தோழர் ஆர். ராமதாஸ் அவர்களின் தந்தையார் 25—9—55ல் இயற்கை எய்தியமை குறித்து, கிளைக் கழகச் சார்பில் அனுதாபம் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

• • •

சென்னை – சைதாப்பேட்டை தி. மு. கழகத் தோழர் மா. பொன்னுசாமி அவர்கள் தந்தையார் 1—10—55ல் இயற்கை எய்தியமைக் குறித்து கிளைக் கழகச் சார்பில் அனுதாபம் தெரிவித்துக் கொள்ளப்படுகிறது.

One side of the page is dark

# தி-கொ. மந்திரிசபைக்குத் 'தலைவலி'

## இன்று நம்பிக்கையில்லா தீர்மானம்

திருவனந்தபுரம், அக் 5—

திரு - கொச்சி மந்திரி சபைக்கு மீண்டும் 'தலைவலி' ஏற்பட்டிருக்கிறது.

இன்று நடைபெறும் திரு — கொச்சி சட்டசபையில், ஒன்பது உறுப்பினர்களைக் கொண்ட புரட்சி சோஷலிஸ்டு கட்சித் தலைவரான டி. கே. திவாகரன் கொண்டுவரும் நம்பிக்கையில்லாத் தீர்மானம் விவாதிக்கப்படும் என்று தெரிகிறது.

117 பேர் கொண்ட சட்டசபையில் காங்கிரஸ் கட்சியின் பலம் 60 உறுப்பினர்கள் மட்டும்தான். கம்யூனிஸ்டுகள், அவர்களைச் சேர்ந்த சுயேச்சைகள் 27; புரட்சி சோஷலிஸ்டுகள் 9; கேரள சோஷலிஸ்டுகள் 3; மக்கள் சோஷலிஸ்டுகள் 15; சுயேச்சைகள் 3 —என்பது கட்சிகளின் நிலை.

ம. சோ. கட்சியின் சட்ட சபை உறுப்பினர் கூட்டம் நடைபெற்றதும், நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை தாங்கள் ஆதரிக்கப் போவதாகப் பட்டம் தாணுப் பிள்ளை தெரிவித்திருக்கிறார்.

உள் நாட்டிலாகா மந்திரியான ஏ. ஜே. ஜான் இதுபற்றிக் குறிப்பிடுகையில், 'நம்பிக்கையில்லாத் தீர்மானம் நிச்சயம் வெற்றி பெறாது; 60 காங்கிரஸ் உறுப்பினர்களும் அன்று சட்ட சபைக்கு வந்து, தீர்மானத்தை எதிர்த்து ஓட்டளிப்பர்,' என்று தெரிவித்திருக்கிறார்

# காங்கிரஸ் ஆட்சியின்

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

ரெவினியூ மந்திரி மீது கண்டனத் தீர்மானத்தைக் கொண்டு வந்து பேசிய ராமி ரெட்டி என்பார் குறிப்பிட்டதாவது:—

"ரெவினியூ மந்திரி, எதிர்க் கட்சியினர் எவருமில்லாத வகையில், வட்ட, மாவட்ட ரீதியாக நிலக் குழுக்களை ஜனநாயக விரோதமான வகையில் அமைத்திருக்கிறார்; இவற்றை உடனடியாகக் கலைத்துவிட்டு, எல்லாக் கட்சியினரையும் கொண்ட குழுக்கள் ஜனநாயக ரீதியாக அமைக்கப் பட வேண்டும்;

"மஹ்பூப் நகர் மாவட்ட நிர்வாக அதிகாரியை (கலெக்டர்) பொதுக் கூட்டம் ஒன்றில் காங்கிரசை ஆதரித்தும், சோஷலிஸ்டு கட்சியைக் கண்டித்தும் பேசுமாறு அவரை உதவி ரெவினியூ மந்திரி வற்புறுத்தியிருக்கிறார்;

"முற்போக்குச் சட்டங்களை நிறைவேற்றிவிட்டு, அவற்றை சாதாரண மக்களின் நலனுக்காக அமுல் செய்ய மறுத்து, மக்களை முட்டாளாக்க நினைக்கிறது, சர்க்கார்; இது மிகவும் இழிவானதாகும்;

"கூட்டுறவு சங்கங்களுக்கு கலால் ஒப்பந்தங்கள் தருவதென மந்திரி சபை முடிவு செய்திருந்தும், ரெவினியூ மந்திரி அவற்றிற்கு ஒப்பந்தம் தர மறுத்து வந்திருக்கிறார்; இன்றும் பழைய 'காண்டிராக்டர்'களுக்கே அந்த ஒப்பந்தங்கள் தரப்படுகின்றன; இவ்வாறு அவர் மந்திரி சபையின் முடிவுகளுக்கு விரோதமாக நடந்துகொள்கிறார்;

"விவசாயிகளுக்கு 'தக்காவி'க் கடன் தருவதை சர்க்கார் நிறுத்தியது கண்டிக்கத்தக்கது; உடனே அந்த முடிவை திரும்பப் பெற்றாக வேண்டும்;

"அதிகாரிகளை மாற்றுவதிலும், நியமிப்பதிலும் 'தாட்சண்யம்' பார்ப்பவர்களாயும், 'பாரபட்சம்' காட்டுபவர்களாயும் சர்க்கார் நடந்துகொண்டிருக்கிறது; இது, சர்க்காருக்குக் கெட்ட பெயரைச் சம்பாதித்துத் தந்திருக்கிறது."

உள்நாட்டு இலாகா மந்திரிமீது நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் கொண்டுவந்து பாபி ரெட்டி பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

"அதிகாரிகள் நியமனத்தில் எவர் தகுதியுடையவர் என்பதை நிர்ணயிப்பதற்கு சர்க்காரிடம் 'சரி'யான கொள்கை இல்லாமையினால் பொறுப்பான பதவிகளில் தகுதியற்றவர்கள் நியமிக்கப்பட்டு விடுகின்றனர்;

"உள்நாட்டு இலாகா மந்திரி,

அதிகாரிகள் நியமன விஷயத்தில் ஒரு குறிப்பிட்ட மொழி பேசுபவர்களுக்கே — அல்லது, குறிப்பிட்ட வகுப்பினருக்கே சலுகை காட்டுபவராக — பாரபட்சம் காட்டுபவராக நடந்து கொள்கிறார்; இப்படி மக்களை நீண்ட நாளைக்கு 'மடையர்'களாக்கி வைத்திருக்க முடியாது என்பதை அவர் தெரிந்துகொள்ள வேண்டும்; மாநிலத்தில் குற்றங்கள் அதிகரித்திருக்கின்றன; ஆனால், குற்றவாளிகளைக் கண்டுபிடித்துத் தண்டிப்பதில் அதிகாரிகள் போதுமான கவனம் செலுத்தவில்லை;

"உத்தியோக உயர்வு தருவதில் நீண்டகால சேவை புரிந்தோருக்குத்தான் 'உயர்வு' என்ற முறை கட்டுப்பாடாகப் பின்பற்றப்பட வேண்டும்; தகுதி, திறமையின் பெயரால் ஒரு வகுப்பாருக்கே பதவி உயர்வு தரப்படுவது கண்டனத்திற்குரியதாகும்.

'மானியம், 'பெர்மிட்' முதலியன வழங்கவேண்டுமெனசிலருக்கு வர்த்தகத் தொழில் இலாகாவில் சிபாரிசு செய்யவும் முற்பட்டிருக்கிறார், இந்த மந்திரி;

"மேலும் முதன் மந்திரி, 'ரெவினியூ போர்டு' அங்கத்தினராயிருக்கும் தனது மருமகனுக்கு, அளவுக்கு மீறிய சலுகை அளித்திருக்கிறார்.

திட்டமான சம்பவங்களைச் சுட்டிக்காட்டி, அந்த ரெவினியூ போர்டு அங்கத்தினரின் கீழ் உள்ள இலாகாவின் வரவு - செலவுக் கணக்குகளில் குழப்பம் மிகுந்திருப்பதையும், அந்தக் கணக்குகளைத் தணிக்கை செய்ய தணிக்கைக் குழுவினர் மறுத்துவிட்டதையும் பாபி ரெட்டி சுட்டிக்காட்டியிருக்கிறார்.

தொடர்ந்து பேசிய உறுப்பினர்கள், மந்திரிகளின் இலஞ்சம் வாங்குதல், சலுகை காட்டுதல் போன்ற நடவடிக்கைகளுக்குத் தங்களிடமிருக்கும் ஆதாரங்களை எடுத்துக் காட்டி, கண்டனக் குரல் எழுப்பியிருக்கின்றனர். விவாதம் தொடர்ந்து நடைபெறும்.

நாளை, மந்திரிகள் பதிலளித்ததும், தீர்மானங்களின் மீது வாக்கெடுப்பு நடைபெறும் எனத் தெரிகிறது.

---

சென்னை மாநில

## கைத்தறி நெசவாளர்

கூட்டுறவுச் சங்கம்

(பேசின் பிரிட்ஜ் தொழிற்சங்கம்)

★

7—10—55 வெள்ளி மாலை 6 மணிக்கு, சென்னை-சூளை, நான்ரான்ஸ்மித் நகர் திரு. வி. க. திடலில் மாபெருங் கூட்டம், சங்கத் தலைவர் தோழர் எஸ். பக்கிரிசாமி எம். எல். ஏ., தலைமையில் நடைபெறும். தி. மு. கழகத் துணைப் பொதுச்செயலாளர் என்.வி.நடராசன், தோழர்கள் சி. பி. சிற்றரசு, எஸ். சி. சி. அந்தோனி எம்.எல்.ஏ., ஆகியோர் பேசுவர்.

அதுசமயம், தி. மு. கழக மாநில மாநாட்டுக்கு தொழிற் சங்கச் சார்பில், தி. மு. க. துணைப் பொதுச்செயலாளரிடம் நிதி அளிக்கப்படும்.

---

# சிறைச்சாலைக்குள் கைதிகள் 'கலாட்டா'

## 'வார்டை' ஆக்கிரமித்தனர்; அதிகாரிகளை உள்ளே நுழையவிடுவதற்கு மறுத்தனர்

ஐதராபாத், அக். 4—

இங்குள்ள முஷிராபாத் சிறையில் கலவரம் ஏற்பட்டதாகத் தெரிய வருகிறது.

உதவி சிறை அதிகாரி, இன்று மாலை சிறையின் ஒரு 'வார்டு'க்குச் சென்றபோது, அங்கிருந்த சுமார் 500 கைதிகள் அவரைச் சூழ்ந்து கொண்டனராம்; அதைத் தொடர்ந்த குழப்பத்தின்போது, காவல் நின்றுகொண்டிருந்த ஒரு சிறை வார்டரிடமிருந்து துப்பாக்கியைக் கைதிகள் பறித்துக் கொண்டனராம்; நல்ல வேளையாக, அந்தத் துப்பாக்கியில் குண்டுகள் இருக்கவில்லையாம்.

சிறைச் சுவர்கள் மீதேறி சில கைதிகள் தப்ப முயற்சித்தபோது, சிறைக் காவலர் ஒருவர் துப்பாக்கிப் பிரயோகம் செய்திருக்கிறார்; ஒருவருக்கும் காயம் ஏற்படவில்லையாம்.

இந்தக் குழப்பத்திற்குக் காரணம் என்னவென்பது அறிவிக்கப்படவில்லையாம்.

ஒரு 'வார்டை' ஆக்கிரமித்துக் கொண்ட கைதிகள், தாங்களாகவும் வெளிவர மறுத்துவிட்டதுடன், அதிகாரிகளையும் உள் நுழைய அனுமதிக்க மறுத்துவிட்டனராம்; எவ்வளவோ சமாதானப் படுத்தியும் அவர்கள் கேட்பதாயில்லையாம்

பின்னர் போலீசார் வந்து, சிறை முழுவதையும் வளைத்துக் கொண்டு, நிலையைச்சீர்ப்படுத்தினர் என்று தெரிகிறது.

இப்போது நிலைமை அமைதியாக இருப்பதாக அதிகாரிகளை தெரிவித்திருக்கின்றனர்.

### மாத்தூர் உழவர் தகராறு தீர்ந்துவிட்டது

ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று

மாத்தூர் (ஸ்ரீபெரும்புத்தூர் தாலூகா) கிராமத்திலுள்ள மிராசுதார்களுக்கும் — உழவர்களுக்குமிடையே, அமைச்சர் மாணிக்கவேலரின் முன்னிலையில் ஒப்பந்தம் கையெழுத்தாகியுள்ளதாம்.

தோழர் எஸ். பி. ஆதித்தன் விடுதலை செய்யப்பட்டுள்ளார்; விரைவிலேயே கைது செய்யப்பட்டவர்கள் அனைவரும் விடுதலை செய்யப்படுவார்களென எதிர்பார்க்கப்படுகிறதாம்.

---

# நிதி மந்திரி முகத்தில் கரி பூசிய எம்.எல்.ஏ.

## காங்கிரசில் சேருவதற்கு மறுத்துவிட்டார்!

ஈரோடு, அக். 2—

நிதி மந்திரி சுப்பிரமணியம் பொதுக் கூட்டம் ஒன்றில், எதிர்க்கட்சியிலிருக்கும் சுயேச்சை உறுப்பினர் ஒருவரை காங்கிரசில் சேர்ந்துவிடுமாறு அழைத்திருக்கிறார்.

"தாராபுரம் தொகுதி சட்டசபை உறுப்பினரான கே. ஏ. சேனாபதி (கவுண்டர்) சட்ட சபையில் சர்க்காரை எதிர்க்கும் எதிர்க் கட்சியிலிருக்கிறார்; அவரை காங்கிரசில் சேர்ந்து விடுமாறு கேட்டுக் கொள்கிறேன்," என்று கூட்டமொன்றில் பேசிய மந்திரி சுப்பிரமணியம் கேட்டிருக்கிறார்.

"சர்க்காரின் தவறுகளை எதிர்க் கட்சியினர் சபையில் கண்டித்த போதிலும், சர்க்கார் செய்யும் நல்ல காரியங்களை அவர்கள் பாராட்டுவதுடன், அபிவிருத்தித் திட்டங்களுக்கு ஒத்துழைப்பையும் நல்குவர்,"

என்று, சேனாபதி தெரிவித்திருக்கிறார்.

மீண்டும், கருத்திருமான் என்ற காங்கிரஸ் எம். எல். ஏ, தோழர் சேனாபதி அவர்களைக் காங்கிரசிற்கு வந்துவிடுமாறு வற்புறுத்தவே, தோழர் சேனாபதி அவர்கள், பதிலாகச் சொன்னார்:—

"நான் இதுபற்றி பல கோணங்களிலிருந்தும் சிந்தித்தாக வேண்டும்; ஆனால், சர்க்காரின் அபிவிருத்தித் திட்டங்களுக்கு எனது முழு ஆதரவையும் தர முடியுமென உறுதி மொழி கூறுகிறேன்."

### பெங்களூர் மாவட்ட தி.மு.க. பிரதிநிதிகட்கு

"9-10-55 மாலை 3 மணிக்கு, பெங்களூர் மாவட்ட தி. மு. கழகப் பிரதிநிதிகள் கூட்டம், அக்கிப்பேட்டை கிளைக் கழக அலுவலகத்தில் நடைபெறும்"

என்று, பெங்களூர் மாவட்ட தி மு. கழகச் செயலாளர் தோழர் எஸ். வி. பதி அறிவிக்கிறார்.

---

# 'சாதீய முறைக்கேடு சமூகத்தை அழித்துவிடும்'

## 'அதை ஒழிக்க வழி கண்டாக வேண்டும்'— பண்டித பந்த் கருத்து

புதுடில்லி, அக். 4—

"சாதீய முறை, அழிவைத் தேடித்தரும் ஒரு சக்தியாகும்; அதனுடைய வேறு அம்சங்களுக்கும் அப்பால், சாதீயமுறை மதத்தினால் அங்கீகரிக்கப்பட்டு, சாதிகளைப் பின்பற்றுவது மதப் பழக்கமாகவே கருதப்படுகிறது; மதத்தின் ஒரு பகுதியாகவே சாதிகள் அமைந்து விட்டன; இது மனித சமூக அழிவைத் தான் தேடித்தரும்;

"தெய்வீகமானவை—என்று கருதப்படும் கோவில்களில் கூட, இந்த சாதிய முறைகள் பின்பற்றப்படுகின்றன;

"அங்குகூட, ஒரே மதத்தைப் பின்பற்றுபவர்களிடையே வேறுபாடுகள் கற்பிக்கப்படுகின்றன; கோவிலுக்குள் நுழைய அனுமதி மறுக்கப்படுபவர்கள், தங்களுக்கு இழைக்கப்படும் அவமானத்தையும், கஷ்டங்களையும் கூடப் பொருட்படுத்தாமல் தாங்கள் தொடர்ந்து அதே மதத்தைப் பின்பற்றுகின்றனர்— அந்த மதத்தில் நம்பிக்கை வைக்கின்றனர்;

"டில்லியில் ஜைனக் கோவில்கள் உள்பட பல கோவில்களில் தாழ்த்தப்பட்ட மக்கள் நுழைய முடியாத நிலை இருக்கிறது;

"சாதியக் கேடு இந்து மதத்தில் மாத்திரம் இருக்கவில்லை; முஸ்லீம்கள் தங்கள் மதத்தை ஒரு ஜனநாயக மதம் என்று கூறிக் கொள்கின்றனர்; ஆனால், இஸ்லாம் மதமும், இந்தக் கேடு இடம் பெறாமல் தப்பவில்லை;

"ஒடுக்கப்பட்ட மக்களின் விமோசனத்திற்கான மதம் — என்று கிறித்துவ மதம் கூறப்படுகிறது; ஆனால், தென்னாட்டில், இந்து மதத்தில் சாதியக் கேடுகள் எத்தனை கடுமையாக மேற்கொள்ளப்படுகின்றனவோ, அத்தனை கடுமையாக கிறித்துவ மதத்திலும் மேற்கொள்ளப்படுகின்றது;

"இந்தச் சாதிய முறை சமுதாயத்தைப் பிளவு படுத்தித் துண்டு துண்டாக்கிவிடுகிறது;

"எனவே இந்தச் சிக்கலான சாதியக் கேடுகளை ஒழிக்க நல்லதோர் வழிகாண வேண்டுவது அவசியம்; இது குறித்து சமூக சேவகர்கள் சிந்திக்கவேண்டும்,"

என்று, பண்டித பந்த் குறிப்பிட்டிருக்கிறார்.

---

# துன்புறும் மக்களுக்கு உடனடி நிவாரணம்

வெள்ளத்தால் பாதிக்கப்பட்டுள்ள மக்களுக்கு உடனடியாக உதவுவதற்கென ரூ. 1,28,00,000 மதிப்புள்ள 20,000 டன் உணவுத் தானியங்களை அமெரிக்காவிடமிருந்து நன்கொடையாகப் பெற்றுக் கொள்வதற்கு இந்திய சர்க்கார் ஒப்புக்கொண்டிருக்கிறதாம்.

இந்த உணவுத் தானியங்களை அமெரிக்கா இனாமாகத் தருவதுடன், அவைகளை இந்தியத் துறைமுகங்களுக்குக் கொண்டு வரும் கப்பல் செலவுகளையும் அமெரிக்காவே ஏற்றுக்கொள்ளுமென்றும், வசதி ஏற்பட்டால் மேலும் அதிகமான உணவுத் தானியம் இனாமாகவே தரப்படுமென்றும் டில்லியிலுள்ள அமெரிக்கத் தூதுவர் குறிப்பிட்டுள்ளாராம்.

அமெரிக்காவிலிருந்து கிடைக்கும் தானியங்களுக்குச் சமமான உணவுத் தானியங்களை கையிருப்பிலிருந்து எடுத்து, வெள்ளத்தால் வேதனையுறும் மக்களுக்கு உடனடியாக இந்திய சர்க்கார் அனுப்பி வைக்கும்.

---

# காஷ்மீர் தகராறு

## பாகிஸ்தானில் ஆர்ப்பாட்டங்கள்!

கராச்சி, அக். 3—

'இந்தியாவே! காஷ்மீரைவிட்டு வெளியேறு' என்று குரல் எழுப்பும் ஆர்ப்பாட்டக்காரர்கள், இன்று பாகிஸ்தான் பிரதமர் இல்லத்தின் முன்கூடி ஆர்ப்பாட்டம் நடத்தியிருக்கின்றனர்.

கராச்சி காஷ்மீர் முன்னணியினர், மூன்று கிழமைகளுக்கு முன் துவக்கிய இந்த ஆர்ப்பாட்டம், ஐ. நா. தகவல் பகுதி அலுவலகம், 5 பத்திரிகை அலுவலகங்கள், இந்தியத் தூதுவர் அலுவலகம் ஆகியவற்றின் முன் ஏற்கனவே நடத்தப்பட்டது.

நேற்று, இந்தியத் தூதுவராலுவலகத்தின் முன்பு நடைபெறவிருந்த ஆர்ப்பாட்டம் ஏனோ திரும்பப் பெறப்பட்டதாம்.

குலாம் முகம்மது என்ற 22-வயது அகதி ஒருவர் நேற்று அமெரிக்கத் தகவல் தரும் நிறுவனத்தின் முன் 20 மணி நேர உண்ணா நோன்பினைத் துவக்கியிருக்கிறாராம்.

காஷ்மீர் சிக்கலைத் தீர்ப்பதற்கு, ஐ. நா.-வில் தனக்குள்ள செல்வாக்கினை அமெரிக்கா பயன்படுத்த வேண்டும் என்று கோருவதற்காகவே இந்த உண்ணா நோன்பு துவக்கப்பட்டதாகக் கூறப்படுகிறது.

காஷ்மீர் பற்றிய இந்தியாவின் கொள்கைக்கு எதிராக 'சத்தியாக்கிரக'த்தில் ஈடுபடுவதென, முஸ்லிம் இளைஞர் சங்கத்தவர் முடிவு செய்திருக்கின்றனராம்.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24, சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம் சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: இரா. நெடுஞ்செழியன் எம் ஏ.

